அச்சுப்புத்தகத்தைப் பரமப்ராமாணிகமென்று கொண்டு அஸ்தாநே ப்ரத்யவஸ்தானம் பண்ணுவது தகாது. தங்களுக்குப்பாடம் கிடைக்கவில்லையென்கிற காரணத்தினால், பிறர்க்குக்கிடைத்திருக்கின்ற பாடத்தை ஆக்ஷேபிக்கப்புகுவது மிகவும் ஸாஹஸம். ஸ்வயம் அம்ருத பானம் பண்ண பாக்கியமில்லாதவர்கள் அம்ருதத்தையே தூஷிக்கப்புகுவதுமுண்டோ?

63. ஜகத்காரணத்வஹேதுநிரூபணம்; ஈச்வரனே ஜகத்துக்குக்காரணம் என்பது வேதாந்திகளின் கொள்கை. ஜகத்தை ஈச்வரன் ஸ்ருஷ்டிக்குமளவில் ஸ்வேச்சையாலே ஸ்ருஷ்டிக்கிறானேயொழிய வேறு ஹேதுக்களாலே ஸ்ருஷ்டிக்கிறானல்லன். ஸ்ருஷ்டியைக்குறித்து வேறு ஹேதுக்கள் எவை இருக்கக்கூடும் என்று பார்க்குமளவில், நம் ஆசார்யர்கள் சில ஹேதுக்களைக் காட்டுகிறார்கள் — அவித்யை, கர்மம் பரநியோகம் என்னுமிவை. இவை எம்பெருமான் செய்யும் ஸ்ருஷ்டியைக்குறித்துக் காரணமாகச் சொல்லப்படுகின்றனவல்ல; ஸாமாந்யமாக இதரர்கள் செய்யும் ஸ்ருஷ்டியைக் குறித்து இவை காரணமாகக் கூடியவை யென்றும் எம்பெருமான் செய்யும் ஸ்ருஷ்டிக்கு இவை காரணமல்லவென்றும் தத்வத்ரயம் முதலான க்ரந்தங்களில் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இதரர்கள் செய்யும் ஸ்ருஷ்டியில் அவித்யையும் கர்மமும் பரநியோகமும் காரணமாகிறபடி எங்ஙனே யென்னில், உலகத்திலே ஒன்றையொன்று உண்டாக்குவதாகக் காண்கிறோம். அப்படியுண்டாக்குவதற்கு எது காரணமாகிற தென்னில், அவித்யையும் கர்மமும் காரணமாகிறது. விஷயாந்தர ஸாபேக்ஷப்ராவண்ய ஹேதுவான அஜ்ஞானத்தாலும் கர்மத்தாலும் ஒன்றையொன்று உண்டாக்கக் காண்கிறோம். அதிகாரி புருஷர்களான பிரமன் முதலானோர் பகவானுடைய கட்டளையினால் ஸ்ருஷ்டி செய்கையாலே அவர்களின் காரணத்வத்துக்கு பரநியோகம் காரணமாகிறது. எம்பெருமான் செய்யும் ஸ்ருஷ்டிக்கு இவை காரணமல்ல; ஸ்வேச்சையே காரணமென்றது.

இதரர்கள் செய்யும் ஸ்ருஷ்டிக்குக் காரணமாகக் கூடியவை அவித்யா கர்ம பரநியோகங்களாகிற இவைமாத்திரமேயோ? இன்னும் ஏதேனுமுண்டோ? என்று விமர்சித்த ஆசார்யர்கள் இன்னமுமொன்றுண்டு என்று கூறியிருக்கிறார்கள். அது எதுவென்னில்; தத்வத்ரய வியாக்கியானத்தில் (ஈச்வரப்ரகரணத்தில்-20). "அவர்ஜநீயமான ரோகமோ" என்றுள்ளவிடத்தில் விசாரம். ரோகம் என்று சில ஸ்ரீகோசங்களிலும், ராகம் என்று சில ஸ்ரீ கோசங்களிலும் காண்கிறது. இவற்றில் எது உபபந்நமென்று பார்ப்போம். ரோகம் என்பதே உபபந்நமென்று சிலர் சொல்லுவதால் அந்த பாடத்தின்படியே வைத்து உபபத்தியை விமர்சிப்போம். அவித்யாகர்ம நிபந்தநமான காரணத்வம் எப்படி ஸகல ஜந்துக்களிடத்திலும் ஸித்திக்கிறதோ அப்படியே ரோக நிபந்தநமான காரணத்வமும் ஸித்திக்கக் குறையில்லை. ரோகமுள்ளவன் வயிற்றிலே க்ரிமிகீடங்களுண்டாவதை எங்குங் காணுகின்றோம். ஆகவே காரணத்வத்தைக் குறித்து ரோகத்தையும் ஒரு காரணமாகச் சொல்லலாம்; ஏவஞ்ச ரோகமென்கிற பாடம் கொள்ளத்தக்கதே யென்னலாம்.

64. இங்கே மஹாமதிகள் கூறுவதென்னவென்றால், (அவர்ஜநீயமான) என்கிற விசேஷண ஸமபிவ்யாஹாரத்தினால் இங்கு உண்மையை நிஷ்கர்ஷிக்கலாம். கீதையில் மூன்றாமத்யாயத்தில் (34) * இந்த்ரியஸ்யேந்த்ரியஸ்யார்த்தே ராகத்வேஷௌ வ்யவஸ்திதௌ * என்ற ச்லோகத்தில் ஸ்ரீராமாநுஜபாஷ்யத்தில் "ஷூரீ நவாஸ நாஜ நித தஷ ந-வெ-ஷஷாஸ ஸெ ஆ யொ ஸாமஃ ஸுவஜ உநீயஃ" என்கிற ஸ்ரீஸூக்தியுள்ளது. அதையடியொற்றியே (அவர்ஜநீயமான ராகம்)

http://acharya.org

என்கிற ஸ்ரீஸூக்தி தோன்றியது. ஸ்ரீமத் கோவர்த்தநம் ரங்காசார்யர் ஸ்வாமி ஸம்ஸ்க்ருத பாஷையில் அநுவாதம்செய்து தேவநாகரலிபியில் அச்சிட்டிருக்கிற தத்வத்ரய வியாக்கியானத்தில் " சுவஜஉநீயொஹொ ஹ: " என்கிற பாடம் காண்கிறது. சுவஜஉநீயொ ரொஹ: என்பது கீழே பாடாந்தரமாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. " ஜந்மாந்தரக்ருதம் கர்ம வ்யாதிரூபேண பாததே " என்கிறபடியே கர்மமும் வ்யாதியும் ஒருவாறு அநதிரிக்தமாகையாலே ரோகமென்கிற பாடத்தில் ஔசித்யமில்லை. ராக மென்கிறபாடத்திலும் அநதிரிக்தத்வவாதம் சிலர் செய்வதுண்டு. அவர்களுக்கு நாம் ஒன்று தெரிவிக்க விரும்புகிறோம். ஆசார்யஹ்ருதயத்தில் (69) *உதாத்தாதி பதக்ரமேத்யாதி சூர்ணையில் " எழுத்தசை சீர்ப்பந்தம் அடிதொடை நிரை நிரை யோசை தனையினம் யாப்புப் பாத்துறை" இத்யாதியை விவரித்தருளா நின்ற மணவாளமாமுனிகள் "பந்தமும் தளையுமொன்றாகையால் புநருக்தமாகையாலே இரண்டத்தொன்று வர்ஜிக்கவேணும்" என்றும், " துறையென்கிறவிதுவும் இனத்தின் வகையிலொன்றாகையாலே புநருக்தமாம்" என்றும் அருளிச்செய்திருக்கக்காண்கிறோம். "இரண்டத்தொன்று வர்ஜிக்கவேணு" மென்று ஸ்வாமி ஸ்பஷ்டமாக அருளிச் செய்திருந்தும் ஒன்றையும் வர்ஜிக்கக் காண்கிறிலோம். ஸூக்ஷ்மேக்ஷிகையினால் அநதிரிக்தமாயிருந்தாலும் ஸ்தூலத்ருஷ்டியில் அதிரிக்தமேயென்று கொள்ளத் தட்டில்லை. ரோகமென்கிறபாடத்தை யாதரிக்க விரும்புமவர்களை யாரும் தடைசெய்திலர். இதைப்பற்றி அந்யத்ர விரிவாக எழுதியுள்ளோமாதலால் இங்கு ஸம்க்ஷிப்தமானபடி. மேலே காட்டின கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தியின்படி (அவர்ஜநீயமானராகம்) என்கிற பாடத்திற்கே ஔசித்யாதிசயமுள்ளது. (*)



ஸ்ரீ காஞ்சீ. பிரதிவாதிபயங்கரம்

**அண்ணங்கராசாரியருடைய**

**அறுபத்துநான்கு நல்வார்த்தைகள்**

முற்றுப்பெற்றன.

http://acharya.org